42
செப்டம்பர் 1977
40 காசு

# கசடதபற

ஓவியம்: ரெட்டப்ப நாயுடு



# அக்கம் பக்கம்

வருடா வருடம் சாகித்ய அகாடமி தமிழ் நூலுக்குப் பரிசு கொடுக்கும்போது விமர்சனத்துக்குட்படுவது வழக்கமாகிப் போன ஒன்று. ஆனால் சாகித்ய அகாடமி சென்ற வருடம் தமிழில் தகுதியான நூல் இல்லையெனப் பரிசு வழங்கவில்லை.

தமிழைப் பொறுத்தவரையில், பல்வேறு காரணங்களால், பரிசு இலக்கியத் தரமற்ற நூல்களுக்கும், ஆசிரியர்களுக்குமே போய்ச் சேர்ந்துள்ளது, இரண்டொன்றைத் தவிர. அப்படியிருந்தும் போனவருடம் பரிசு இல்லை என்பதை நாம் ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை.

சாகித்ய அகாடமி இத்தனை வருடங்களாகப் பரிசு தந்த நூல்களின் தரத்திற்குச் சற்றும் குறையாத நூல்கள் பல இருக்கும்போது அவர்கள் அவைகளைச் சென்ற ஆண்டு கௌரவிக்காமல் தவற விட்டுவிட்டது எப்படி என்பதுதான் புதிராக இருக்கிறது.

இந்த ஆண்டு பரிசுக்கான தேர்வுகள் மும்முரமாக நடக்கின்றன. பரிசீலனையில் சுமார் இருபது பேர்கள்—இந்திரா பார்த்தசாரதி, கி. ராஜநாராயணன், நீல. பத்மநாபன், அசோகமித்திரன், கோவி. மணிசேகரன், தி. ஜானகிராமன், சுந்தா, வண்ணதாசன்—போன்ற பேர்கள் உள்ளனவாம்.

சுந்தா எழுதிய 'பொன்னியின் புதல்வர்' என்னும் 'கல்கி' யின் சரித்திரம் (வானதி வெளியீடு) அகாடமியின் பரிசுபெறும் நூலாக இருக்கும் என்றும் பரவலாகச் சொல்லப்படுகிறது.

சாகித்ய அகாடமி பரிசின் தரத்திற்கு இந்த ஆண்டிலும் ஒரு தமிழ் நூல் கிடைத்துவிட்டதற்காக அது பெருமைபட்டுக் கொள்ளலாம்.

* * *

1977 ஆம் ஆண்டின் காமன் வெல்த் கவிதைப் பரிசை 'ஜெஜூரி' என்ற ஆங்கில நூலுக்காக மராத்தியக் கவிஞர் திரு அருண் கோலட்கர் பெற்றிருக்கிறார். அவருக்கு அடுத்த இடத்தைப் பிடித்திருப்பவர் திரு. ஆர். பார்த்தசாரதி. நூல்: 'ரஃப் பாஸேஜ்'

நா. கிருஷ்ணமூர்த்தி

## மெய்யாகவே...

மெய்யை மெய்யென்று நான்
என்றும் கொள்வதில்லை
கனவுகளை நான் எங்கனம்
காண்பது பின்.

வசந்தன்

## சிலையை உடை

(பசுவய்யாவுக்கு)

சிலையை உடை
காற்று வரட்டும்
இடம் சுத்தமாகட்டும்
திறந்த வெளியின்
தீர மணல் பரப்பு
மனத்தின் விடுதலை.

சிலையை உடை
திரைமோதி நுரைக்கட்டும்
அலையின் சுருதியில்
பாரதி பாடட்டும்.
பள்ளும் கோணங்கியும்
காதில் ஒலிக்கட்டும்
திருட்டுத் திரைகிழிந்து
அமுதம் சுரக்கட்டும்

உடை சிலையை
சின்னபின்ன மாக்கு.

காசியபன்

# மயன் கவிதைகள்

மயன் என்ற புனைபெயரில் திரு க. நா. சுப்ரமண்யம் அவ்வப்பொழுது புதுக்கவிதைகள் எழுதி வருவதை அறிந்திருப்பவர்கள் அதிகம் இல்லை. அவை வெளிவந்தபொழுது வாசகர்களிடத்தில் ஏதும் சலனத்தை உண்டுபண்ணவும் இல்லை. ஆனால் தேர்ந்து தெரிந்து படிக்கும் இரண்டொருவரையாவது அவை மகிழ்வித்தன என்பதை மறுக்கமுடியாது. வெளிவந்தவையும் வராதவையுமாக 75 கவிதைகள் தொகுக்கப்பட்டிருக்கும் இந்தப் புத்தகம் கநாசுவைப் புதுக் கவிதையில் மதிப்புக்குரிய ஆசிரியராக்கியிருப்பதை யாரும் அறியமுடியும். கடந்த சில ஆண்டுகளில் வெளிவந்திருக்கும் கவிதைத் தொகுப்புகளில் இந்தத் தொகுப்பு மிக எளிதாகவே சிறந்ததாகி விடுகிறது.

கநாசுவின் கவிதைகளில் பிரதானம் கொள்கிறதென்று எந்த அம்சத்தைக் காணமுடியும்? அநேகமாக, இன்ன வகுப்பென்று சுட்டிக்காட்டமுடியாத ஒரு தத்துவப் பாங்குதான் முக்கிய அம்சமென்று சொல்லத் தோன்றுகிறது. ஏனென்றால் இந்தக் கவிதைகளில அவரது உரை நடை அறிந்த வாசகருக்குப் பரிச்சயமில்லாத ஒரு கநாசுவை, விசித்திர வாக்குடையவராக, யதார்த்த உலகிற்கு மாறுபட்ட உலகில் விழித்தவராக, அவசியமானால் படத்திலிருந்து விபூதியைக் கொட்டவைப்பேன் என்பவராகப் பார்க்கமுடிகிறது. இதுதான் அவருடைய சுபாவம் என்பதை அந்தக் கவிதைகளின் சகஜமே வலியுறுத்தும். இந்தப் பார்வை நம்மை மறித்துவிடுவதாகவோ, மாற்றிவிடுவதாகவோ இல்லை. அப்படி ஒரு நோக்கத்தை அவை வரித்து கொள்ளவும் இல்லை.

அசாதாரண விஷயங்களை நாடும் அளவுக்கு எளிமையான விஷயங்களையும் நுகரும் பண்புடையதாகவும் இருக்கிறது அவருடைய உள்ளம். இந்தத் தொகுபபில் இரண்டைத்தான் அவர் புதுக் கவிதைகள் என்று கருதுகிறார். புதுக் கவிதைகளின் எண்ணிக்கை வேண்டுமானால் இரண்டாக இருக்கலாம். ஆனால் உன்னதமான கவிதைகள் அதற்கும் மேலாகவே உள்ளன.

**ஜெயபாலன்**

---

*மயன் கவிதைகள்* — க. நா. சுப்ரமண்யம் — வெளியீடு: பி கே. புக்ஸ், 184, தெற்கு வெளிவீதி, மதுரை 625 001 விலை: ரூபாய் பத்து.

# மழை

சுவரில் கோடிட்டுக் கீழ் நோக்கி
வழியும் திரவம் போல—மழைமேகங்கள்
இருள் பூசிய வானில்—ஒருபறவை
விரைவின்றித் திரும்பி வர

குழுவாய்ப் பறக்கத் தாமும்
விரும்பிய காக்கைகள்
கூடிப் பறக்கும் திறமை வராமல்
வானில்
தனித்துச் சிதறும் வெற்றுகளாக

ஒருகாக்கை கழுகைத் துரத்த
அச்சமில்லாமல் ஆனால் கழுகு பறக்க
கழுகை இன்னும் துரத்த கழுகு
பறக்கும் உயரத்தைக் கூடுதலாக்க
ஏற இயலாப் படிக்கட்டொன்று
எதிரில் தடுத்தாற்போல காக்கை
கழுகை விட்டுத் தன் இனம் கூட

நெடிய வாலுள்ள குருவிகள் அஞ்சாமல்
இருளும் விசும்பின் அழகில் புரள
நாரை ஊர்வலம் சென்று மறைந்ததும்

மெய்யின் அழகிலும்
வளையின் அழகிலும்
அலகின் அழகிலும்
கண்ணின் அழகிலும் கருடனைக் கண்டு
கிளர்ந்த திக்குகள்
உதிர்த்தன மாரியின் முதல்முத்துக் கூளத்தை

கணுக்கால் எல்லைக்கு மேலே பறக்காத
பறவைப் பூச்சி அதுதான்
தருணமென்பதைத் தெரிந்து கொண்டு
இலையின் மேல்பரப் பொழிந்து
கீழ்ப்புறம் நோக்கிப் பறந்தொடுங்கிற்று.
பின்பு
ஒட்டுக் கேட்ட சொற்களாய்க்
காதில் விழுந்தது நேரெதிர் மாரி.

ஞானக்கூத்தன்

# மீட்சி விண்ணப்பம்

அசலான இலக்கியப்படைப்பாளி தனது மேதாவிலாசத்தால் இலக்கியத்தை ஓர் உச்சத்திற்கு எடுத்துச் செல்லும் முயற்சிகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இம்முயற்சிகள் பெரும்பாலும் சமகாலத்தில் முக்கியத்துவம் அற்ற—வெறும் சம்பவமாகக் கருதப்படுவதாக சரித்திரம் புலப்படுத்திக்கொண்டு வருகிறது

தமிழில் புதுக் கவிதை ஒரு இயக்கமாக வளர்ந்து வருவதை—தொடர்ந்து வரும் பல கவிதைத் தொகுப்புகள் நிரூபித்துக்கொண்டு வந்தாலும் அவையெல்லாம் மிக உயர்ந்த—தரமான கவிதைகள் என்றோ—புதுக் கவிதையின் உச்சங்கள் என்றோ கொள்ளவேண்டிய அவசியம் ஏதுமில்லை. அவைகள் முயற்சியின் அடையாளங்கள்; ஒரு உச்சத்தை அடைய எடுத்துவைக்கும் அடிகள்.

'மீட்சி விண்ணப்பம்' —தி சோ. வேணுகோபாலனின் 24 கவிதைகள் கொண்ட தொகுப்பு 'எழுத்து' பத்திரிகை மூலம் இலக்கிய உலகுக்கு அறியப்பட்டு தொடர்ந்து எழுதி வருபவர் வேணுகோபாலன்.

இவர் எழுதுவதில் கவிதையாவது எது? கவிதை அம்சங்களோடு புதுமையும் கொண்டு புதுக்கவிதையாவது எவை? இவர் கவிதைகளைப் படிக்கும்போது இக்கேள்விகள் தவிர்க்க இயலாது எழுகின்றன.

'வேதத்தைக் கொளுத்துங்கள்—வியாசனுக்கு வாஸக்டமி செய்திருந்தால் குருக்ஷேத்திர மண் குருதியைக் கண்டிராது—வாத்ஸாயனனுக்கு எவனும் கொட்டை அடிக்கக்காணோம்.—போகட்டும்'—போன்ற வரிகள் கவிதையில் ஆசிரியரின் மாடர்னிட்டிக்கு ஓர் உதாரணம்.

'பதிவுகள்' என்ற கவிதையில் நல்லதொரு இமேஜ் வந்திருக்கவேண்டியதை நழுவ விட்டுவிட்டார் ஆசிரியர். ஈர சிமெண்ட் தரையில் ஏற்படும் பதிவுகளைப்பற்றி எழுத

---

*மீட்சி விண்ணப்பம்* — கவிதைத் தொகுப்பு — தி. சோ. வேணுகோபலன் — வெளியீடு: க்ரியா, 23, பி. எஃப். குவாட்டர்ஸ், சென்னை-600 034—விலை: ரூபாய் ஐந்து.

ஆரம்பித்தவர் காக்கை, கழுதை, ஸ்கூட்டர், காத்திருக்கும் காதலி, அது இது என்று அலைபாய்ந்து, இளங்கன்றின் வெள்ளை மனம், பசுவின் நிதானம், காளையின் கம்பீரம், நாயின் குலப்பகை, பூனையின் கபடம், பன்றியின் அவலட்சணம் இவையெல்லாம் குறுகிய தரையில் நிரந்தரம் என்று நீண்டு, 'விரிசல் கண்டு தூள் ஆனாலும் புதியவை பதியாது, பதிந்ததும் நிலைக்காது?' என மீண்டும் நீண்டு 'உருண்டு வரும் கோலிகள் நில்லாது போகலாம் அல்லது குழிக்குள் விழிக்கலாம்' என்று ஒருவழியாக முடிக்கிறார்.

நடப்புச் சூழ்நிலையிலேயே பல பேதங்கள். கவிதையின் உள்ளடக்கிய விஷயத்தில் தெளிவின்மை மிகுவதால் கவிதையாக வந்திருக்கவேண்டியது தவறிவிட்டிருக்கிறது.

'பார்வை' என்ற கவிதையில், 'குலம் கோத்திரம், ஜாதகம், ஜாதி, முப்பாட்டன், பாட்டி, தாய், தந்தை தலைமுறை பெயர் பட்டியல், பெயர் சூட்டும் பெருவிழா, அழகுப் போட்டி எதுவும் இல்லை' என்றவர் சட்டென—

தெரு நாய்

குழந்தை மறுத்த சோற்றுக்கு
சொந்தம் கொண்டாடி
வாலாட்டி வலைவிரித்து
குழந்தையின் மூலம் குடியேறிவிட்டது!

எனக்கு நாயிடம்
பகையுமில்லை; உறவுமில்லை
விரட்டவுமில்லை; வருடவுமில்லை

குழந்தை சிரித்தால் சரி

—என்று முடிக்கிறார். தெருநாய் என்று ஆரம்பிக்கும் பிற்பகுதியில்தான் கவிதைக்கு வேண்டிய அம்சம் இருக்கிறது. இதை நேராக எழுதாமல் முற்பகுதியைச் சேர்த்து கவிதையைப் பூதாகாரத் தோற்றமாக்க முயல்கிறார்.

நேர் கோடாய்நிற்கும்
நெடும்பனை
குறும்புக் காற்று
தண்ணீர் திரையில்
நெளியும் நாகம்

R. No. TN/MS C/120 September 1977
Ka Cha Ta Tha Pa Ra

இக்கவிதைதான் தொகுப்பில் பேர் சொல்லத் தக்க கவிதை யாக இருக்கிறது.

ஆசிரியரின் சில கவிதை வரிகளைப் படிக்கும்போது வேறு சில கவிஞர்களின் நினைவு வருவதைத் தவிர்க்கமுடியவில்லை.

தொகுப்பில் உள்ள கவிதைகள் புதுக் கவிதை வளர்ச் சிக்குப் போதுமான உபயோகமாக இருக்குமெனத் தோன்ற வில்லை மாறாக ஆசிரியரின் கவிதை வரிகளான 'புதியவை பதியாது, பதிந்ததும் நிலைக்காது' என்பது அவருக்கே உண்மை ஆகிவிடுகிறது.

ஆர். சந்திரமௌலி

---



---

Published by: N. M Pati, No I-20 Turnbull Road Madras 600035—Printed by: M K. Swamy at Prem Press, No. 8, M K. Amman Koil Street, Madras 600 004.—Editor: N. Krishnamurthy.